[23rd August 1961

THE HON. SRI R. VENKATARAMAN : I will prefer not to answer this question.

SRI T. S. RAMASWAMI : What are the terms of reference of this Committee?

THE HON. SRI R. VENKATARAMAN : Terms of reference of each one of the Sub-committee relates to a particular industry. For instance, we had a sub-committee on ceramic, a sub-committee on lignite for the utilization of the by-product of lignite. Several sub-committees were constituted from time to time. For instance, we had a committee on alcohol and on some other items. The reports are published in the 'IND-COM' journal.

*Records from Andhra State*

*1361 *Q.*—SRI V. K. KOTHANDARAMAN : கனம் மின்சார அமைச்சர் தயவுசெய்து கிழ்க்கண்ட கேள்விகளுக்குப் பதிலளிப்பாரா—

(அ) ஆந்திராவிலிருந்து நம் மாநிலத்தில் சேர்ந்துள்ள கிராமங்களின் தாலூகா ஆபீஸ், ரிஜிஸ்டிரார் ஆபீஸ் சம்பந்தப் பட்ட. ரிக்கார்டுகள் இன்னும் நமது ராஜ்ய ஆபீஸ்களுக்கு வரவில்லை என்பது உண்மையா ?

(இ) அதற்கான காரணமென்ன ?

(உ) எப்போது வரும் ?

THE HON. SRI V. RAMAIAH : (அ) No, Sir.

(இ) & (உ) Does not arise.

SRI V. K. KOTHANDARAMAN : ஆந்திரப் பகுதியிலிருந்து நம்முடைய ராஜ்ஜியத்தோடு சேர்க்கப்பட்டுள்ள கிராமப் பகுதி களிலே விவசாய அபிவிருத்திக்காக லோன் முதலியவை வாங்கக் கூடிய நேரத்திலே, அது சம்பந்தப்பட்ட ரிக்கார்டுகள் இன்னும் வரவில்லையென்று தாலூகா ஆபீசிலும், ரிஜிஸ்டிரார் ஆபீசிலும் சொல்லப்படுவது அமைச்சருக்குத் தெரியுமா ? இது விஷயமாக தக்க நடவடிக்கை எடுக்கப்படுமா ?

THE HON. SRI V. RAMAIAH : கேள்விக்கு பதிலளிக்கக்கூடிய நேரத்திலே இது போன்ற ரிக்கார்டுகள் வரவேண்டிய நிலைமை இல்லையென்று சொன்னேன். மேற்கொண்டு ஏதாவது கனம் அங்கத்தினர் தகவல் கொடுக்க முடியுமானால் அதைப்பற்றி விசாரிக்க முடியும்.

*Employment Exchanges*

*1362 *Q.*—SRI N. K. PALANISAMI : Will the Hon. the Minister for Industries be pleased to state—

(*a*) the total number of candidates registered in the District Employment Exchanges at Coimbatore and in Madras during the year 1960–61;

23rd August 1961]

(*b*) the total number of persons employed through the Employment Exchanges in the above Centres during the year 1960–61 and the method adopted in sending names to various offices; and

(*c*) whether the Government are aware of any malpractices such as tearing off of the interview cards, supposed to be sent to candidates and making an entry in the despatch register by the members of the staff of the office of the Employment Exchanges, including officers, to favour their candidates, especially in the City of Madras?

THE HON. SRI R. VENKATARAMAN : (*a*) to (*c*) A statement [a] is placed on the table of the House.

**SRI N. K. PALANISAMI** : எம்ப்ளாய்மென்ட் எக்ஸ்சேஞ்சில் இரண்டு மாதங்களுக்கு ஒரு தடவை ரிஜிஸ்ட்ரேஷனைப் புதுப்பித்துக் கொள்ளவேண்டுமென்ற முறை இருப்பது பதிவு செய்து கொள்பவர்களுக்குக் கஷ்டமாக இருப்பதால், குறைந்தது ஆறு மாதங்களுக்கு ஒரு தடவை ரிஜிஸ்ட்ரேஷனைப் புதுப்பித்துக் கொண்டால் போதும் என்ற முறையில் மாற்றியமைக்க சர்க்காருக்கு உத்தேசம் உண்டா ?

**THE HON. SRI R. VENKATARAMAN** : இரண்டு மாதங்களுக்கு ஒரு முறை புதுப்பித்துக் கொள்ளவேண்டுமென்று சொல்வது, லைவ் ரிஜிஸ்தராக இருக்கவேண்டும், ரிஜிஸ்தர் அப்-டு-டேட் ஆக இருக்க வேண்டும் என்பதற்காக. அப்படியில்லாவிட்டால், இதன் இடையில் யாருக்காவது வேலை கிடைத்திருந்து, அவர் பெயரும் ரிஜிஸ்தரில் இருந்துகொண்டே இருக்கும். அதனால், வேலையில்லாதவர்களுக்கு வேலை கிடைப்பதில் தாமதம் ஏற்படக்கூடும். அதற்காகத்தான் இரண்டு மாதங்களுக்கு ஒரு முறை புதுப்பித்துக் கொள்ள வேண்டுமென்ற முறையை வைத்திருக்கிறோம். அப்பொழுதுதான் வேலை கிடைத்தவர்கள் பெயர் நீக்கப்பட்டு, மற்றவர்களுக்கு வேலை கிடைக்கச் சந்தர்ப்பம் இருக்கும்.

**SRI N. MARUDACHALAM** : கோவையிலுள்ள வேலை தேடித் தரும் ஸ்தாபனத்தில் முன்னால் பதிவு செய்துகொண்டவர்களுக்குப் பின்னாலும், பின்னால் பதிவு செய்துகொண்டவர்களுக்கு முன்னாலும் இன்டர்வ்யூ கார்டு அனுப்பப்படுகிறதென்பதும், அதற்குக் காரணம் அங்கு வேலை செய்யும் குமஸ்தா திரு. சாமுவேல் என்பதும், அந்த குமஸ்தாவின் பேரில் பல பேர் புகார் செய்திருக்கின்றார்கள் என்பதும் கனம் அமைச்சருக்குத் தெரியுமா ? அவர் பேரில் அம்மாதிரி புகார் இருந்தால், அவர் மீது நடவடிக்கை எடுக்க சர்க்காருக்கு உத்தேசம் உண்டா ?

DEPUTY SPEAKER : The hon. Member should not make a reference to the names of individuals.

**THE HON. SRI R. VENKATARAMAN** : அந்த குமஸ்தா அம்மாதிரி செய்வது எப்போதும் தவறாக இருக்க முடியாது. ஒரு வேலைக்கு என்ன என்ன யோக்கியாம்ஸங்கள் என்று குறிப்பிட்டு, அதற்குத் தகுந்த நபர்களைத் தேர்ந்தெடுத்து அனுப்பும்

---

[a] Printed as Appendix V on page 755 in fra,

படியாக எம்ப்ளாய்மென்ட் எக்ஸ்சேஞ்சுக்குத் தகவல் வருகிறது. அப்பொழுது, முன்னல் ரிஜிஸ்தர் செய்துகொண்டவர்களுக்குக் குறிப்பிட்ட யோக்கியதாம்சங்கள் இல்லாவிட்டால், அவர்களுக்குத் தகுந்த பயிற்சி இல்லாவிட்டால், அவர்களை அனுப்பாமல், பின்னல் பதிவு செய்துகொண்டவர்களானாலும், அவர்களுக்கு யோக்கியதாம்சங்கள் இருந்தால், அவர்கள் பெயரை அனுப்பத்தான் வேண்டும். பின்னல் பதிவு செய்துகொண்டவர்களை அனுப்புவது எப்பொழுதும் தவறு என்று நினைக்கக் கூடாது. அது அந்தந்த சந்தர்ப்பத்தையொட்டி சரியாக அனுப்பப்பட்டிருக்கிறதா என்று தான் பார்க்கவேண்டும். அதைக் கவனிப்பதற்காகத் தான் லோகல் கமிட்டி போட்டிருக்கிறோம். அந்த லோகல் கமிட்டியிலுள்ள ஆபீசரைப் பார்த்து, என்ன என்ன முறையில் பெயர்கள் ஸப்மிஷன் செய்யப்பட்டது என்று கேட்கக் கூடிய உரிமை தொழிற் சங்கப்பிரதிநிதிகளுக்குக் கொடுத்திருக்கிறோம்.

**SRI S. NAGARAJA MONIGAR:** ஜாபிதா சரியானதாக இருப்பதற்காக அடிக்கடி சம்மந்தப்பட்டவர்கள் பதிவு செய்து கொள்வது தான் நலம் என்று கனம் அமைச்சர் சொன்னலுங்கூட, அந்த ஸ்தாபனம் வெகு தூரத்தில் இருப்பதால், அங்கு சென்று பெயரை அடிக்கடி ரிஜிஸ்தர் செய்துகொள்வதில் ஏழை எளியவர்களுக்குப் பெரும் கஷ்டங்கள் இருப்பதால், இரண்டு மாதங்களுக்கு ஒரு முறை என்று இருப்பதற்குப் பதிலாக நான்கு மாதங்களுக்கு ஒரு முறை என்று மாற்றுவதற்கு சர்க்கார் முன்வருமா?

**THE HON. SRI R. VENKATARAMAN:** வேலையில்லாதவர்கள் இந்தச் சிறு வேலையாவது செய்யலாம். (சிரிப்பு.)

**SRI N. K. PALANISAMI:** இன்டர்வ்யூ அன்று தான் சம்மந்தப்பட்டவர்களுக்குக் கார்டு கிடைக்கிறது. அதனல், பெருவாரியாக எம்ப்ளாய்மென்ட் எக்ஸ்சேஞ்சில் பதிவு செய்து கொண்டவர்கள் இன்டர்வ்யூவுக்குப் போக முடிவதில்லை. இன்டர்வ்யூவுக்குப் போகாததால், அவர்களைத் தள்ளிவிடுகிறார்கள். ஆகவே, இன்டர்வ்யூ கார்டு முன்னதாகக் கிடைப்பதற்கும், அப்படிக் கிடைக்காவிட்டால் அதன் காரணத்தை விசாரித்துக் கேட்டு பரிகாரம் தேடுவதற்கும் ஏற்பாடு செய்யப்படுமா?

**THE HON. SRI R. VENKATARAMAN:** இதையெல்லாம் கவனிப்பதற்குத் தான் ரீஜனல் கமிட்டி போட்டிருக்கிறோம். அம் மாதிரி புகார் கனம் அங்கத்தினருக்கு வந்திருந்தால், ரீஜனல் கமிட்டியிலிருக்கும் தொழிற் சங்கப் பிரதிநிதி மூலம், இன்டர்வ்யூ கார்டு தக்க காலத்தில் அனுப்பப்படாத காரணத்தை கமிட்டியில் விசாரிக்கலாம். சர்க்காரிடத்தில் அந்த விதமான தகவல் இருக்காது.

**SRI P. G. MANICKAM:** கோயமுத்தூர் ஜில்லாவில் 1960-61-ம் ஆண்டில் 14,000 பேர்கள் வேலைக்காகப் பதிவு செய்து கொண்டிருந்தும் 3,000 பேர்களுக்குத் தான் வேலை கிடைத்திருக்கிறது என்று இதில் தெரிவிக்கப்பட்டிருக்கிறது. இந்த 11,000 பேர்களும்

23rd August 1961]

இரண்டு மாதங்களுக்கு ஒரு தடவை ரிஜிஸ்ட்ரேஷனைப் புதுப் பித்துக் கொள்வதென்றால் பெரிய சிரமம் இருக்கிறது. ஆகவே, தயவு செய்து, இரண்டு மாதங்களுக்கு ஒரு தடவை என்பதற்கு பதிலாக ஆறு மாதங்களுக்கு ஒரு தடவை என்ற யோசனையைச் சர்க்கார் மீண்டும் பரிசீலனை செய்யுமா?

DEPUTY SPEAKER: The Hon. Minister has already answered a similar question.

**SRI A. V. P. ASAITHAMBI:** தலைவர் அவர்களே, பதிவு செய்து கொண்டிருந்தாலும் வேலை கிடைக்காமலிருக்கும்போது, அப்படிப்பட்டவர்களுக்கு வேலை கிடைக்கும் காலம் வரைக்கும் ஏதாவது ஒரு உதவித் தொகை கொடுக்கக் கூடிய முறையில் பல நாடுகளில் திட்டம் இருக்கிறதே, அதுபோன்று நம் நாட்டிலும் திட்டம் உண்டா? வயதானவர்களுக்கு உதவித் தொகை கொடுக்க அரசாங்கம் இப்பொழுது ஏற்பாடு செய்திருப்பதாகத் தெரிகிறது. அது மாதிரி, வேலையற்றவர்களுக்கு முதலில் பண உதவி செய்து விட்டு, பின்னால் வேலை பெறுகிறபோது வசூலித்துக் கொள்ளும் அளவுக்குத் திட்டம் வகுக்க அரசாங்கம் முன்வருமா?

**THE HON. SRI R. VENKATARAMAN:** அந்தத் திட்டம் கூட செய்ய வேண்டியது அவசியம் தான். நம்முடைய ராஜ்யத்தின் நிதி நிலை சரியாக அந்த அளவு வரும்போது நிச்சயமாக இந்த சர்க்கார் அதை ஏற்றுக்கொள்ளும்.

SRI M. WILLIAM: Is there any local committee in the Kanyakumari district? If not, may I know the reason?

THE HON. SRI R. VENKATARAMAN: A separate question may be put, Sir.

*Palar Porandalar Scheme*

* 1363 *Q.*—SRI M. D. THIAGARAJA PILLAI (on behalf of SRI N. R. THIAGARAJAN): கனம் பொது மராமத்து அமைச்சர் தயவுசெய்து கீழ்க்கண்ட கேள்விக்குப் பதிலளிப்பாரா?

மதுரை ஜில்லா பழநி தாலுக்கா பாலாறு பொருந்தலாறு திட்டம் இந்த ஆண்டு வேலை துவக்கப்படுமா?

THE HON. SRI P. KAKKAN: The matter is under the consideration of Government.

*Bus permits (marking system)*

* 1364 *Q.*—**SRI R. SRINIVASA IYER (on behalf of SRI A. VEDARATHNAM):** கனம் மின்சார அமைச்சர் தயவுசெய்து கீழ்க்கண்ட கேள்விகளுக்குப் பதிலளிப்பாரா—

(அ) பஸ் பர்மிட்டுகளுக்கு முன்உரிமை வழங்கும் மார்க்கு திட்டம் எந்த அடிப்படையில் கணக்கிடப்படுகிறது?

(இ) இந்த முறையில் உள்ள அனுகூலமென்ன?